வெளியீடு எண் : 358.



உ

சிவமயம்

# காஞ்சிப் புராணத்தில் ஒழுக்கப்படலம்

( உரையுடன் )





திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை

1987




அன்பளிப்பு :
தஞ்சாவூர்
M.A.B.T



உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

## திராவிட மாபாடியகாரர்

## ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள்

# இருநூற்றிரண்டாம் ஆண்டு விழா மலர்

பிரபவ — சித்திரை ஆயில்யம் — 23உ

6 — 5 — 1987



அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உக்கநாதன் M.A.B.T

வெளியீடு எண் 358.

உ

சிவமயம்

# காஞ்சிப் புராணத்தில்
# ஒழுக்கப் படலம்

## ( உரையுடன் )



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
அருளாணையின் வண்ணம்
வெளியிடப்பெற்றது.



திருக்கயிலாய பரம்பரைத்
**திருவாவடுதுறை ஆதீனம்**
1987

உ

சிவமயம்

# முகவுரை



மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே.

இன்ப வாழ்வைப் பெறவே யாவரும் விரும்புவர் விரும்ப வேண்டுவதும் அதுவே. அதனை அடைவது எப்படி? தீ நெறியின் நீங்கி நன்னெறியில் வாழ்வாங்கு வாழ்தலே. அந்நல்வாழ்வினை அடைவிப்பதாகிய ஒழுக்க நெறிகளை யுணர்த்தும் நூல்கள் பல.

திருவாவடுதுறை ஆதீனத்துக் குலதெய்வமாகத் திகழும் திராவிட மாபாடியகர்த்தர் ஸ்ரீ மர்தவச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த காஞ்சிப்புராணத்தில் 'ஒழுக்கப்படலம்' எனும் பகுதி அமைந்துள்ளது. பிரமசரியம் முதலிய நான்கு நிலைகளிலும் நின்று ஒழுகவேண்டிய நெறிகளைச் சுவாமிகள் இப்படலத்தில் அறிவித்தருளுகின்றார்கள்.

சுவாமிகள் அருளிய நெறிகளில் நின்று யாவரும் மேன்மை பெறவேண்டும் என்பது திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானமாக எழுந்தருளிச் சித்தாந்த சைவச் செந்நெறியினையும் செந்தமிழையும் புரந்தருளும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுள்ளம். 1964-ல் இவ்வாதீனப் பொருளுதவி கொண்டு வெளியிடப்பெற்ற

காஞ்சிபுரம் திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை வெளியீடாகிய காஞ்சிப்புராணத்தில் ஒழுக்கப்படலத்தை திரு பொன். சண்முகனுர் எழுதிய பொழிப்புரையுடன் அச்சிட்டு வெளியிட ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளினூர்கள். அவர்கள் அருளாணையின் வண்ணம் பிரபவ ஆண்டு சித்திரை ஆயிலியம் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் சிவானந்தப்பேறெய்திய திருநாளில் இந்நூல் ஆதீன வெளியீடாக வெளிவருகின்றது.

அடியேனை ஆதீனப் பணிகளில் ஆட்கொண்டு அருள் பாலிக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் பொற்பாத கமலங்களை மனம்மொழிமெய்களால் வணங்கும் கடப்பாட்டினையுடையேன்.

சரசுவதிமகால் நூல்நிலயம்
திருவாவடுதுறை ஆதீனம்
திருவாவடுதுறை.
27—4—87

இங்ஙனம்
**பா. மகாலிங்கம்**
ஆதீன நூலகர்.



ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்

## குருமரபு வாழ்த்து



கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞான முனிவர்.

உ

சிவமயம்

# ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள் வரலாறு

(காலம் கி. பி. 1753 — 1785)

ooooooooooo

**முனிவர்களும் தலயாத்திரையும் :**

தமிழ் மக்கள் உய்யும் வண்ணம் இந்த ஆதீனத்து உப்ய சந்நிதானங்களும், தம்பிரான் சுவாமிகளும், அடியவர் கூட்டங்களும் அடிக்கடி தமிழ்நாட்டிலே சிவதல யாத்திரை செய்து அங்குள்ள அன்பர்கட்கு அனுக்கிரகம் புரிந்து சிவபத்தி குரு பத்தி அடியார்பத்தி முதலியன குன்றாமல் தமிழ் மொழியையும் சித்தாந்த சைவ சமயத்தையும் வளர்த்து வருவாராயினர். சில சமயங்களில் அற்புதச் செயல்களால் மக்களை வசமாக்கி ஆதீனத்துக்கு அடிமைப் படுத்தி அன்புவளரச் செய்தனர். பலருக்கு நோய்களைப் போக்கி உபகாரமும் செய்து அவர்களால் மனமுவந்து கொடுக்கப்பட்ட பொருள்களைத் தம் ஆதீனத்திலே சேர்த்தும் வந்தனர். தம்பிரான்களில் பலர் வித்துவான்களாகவும் மந்திர சித்தி பெற்றவர்களாகவும் மருத்துவமுறையிலே தேர்ந்தவர்களாகவும் இருந்து ஆதீனத்துக்குப் பல்லாற்றானும் நன்மையும் நன்கு மதிப்பும் உண்டாகுமாறு செய்து வந்தனர். ஞான தேசிகர்கள் உலகுக்குப் பயன் தரத்தக்க தம்பிரான்கள் முகமாக எல்லாவற்றானும் மக்கட்குப் பயன் பட்டு வந்தனர். அதனால் அரசரும் அரசச் செல்வமுடைய பிரபுக்களும் தமிழ்மொழி வடமொழி வல்ல பெரும் புலவர்களும் பொது மக்களும் அடிக்கடி வந்து ஞான தேசிகரைத் தரிசித்து அளவளாவியிருந்து மகிழ்ந்து செல்வர். ஆதீனத்தின் புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவத் தொடங்கியது.

**முக்களாலிங்கர் பிள்ளைப் பருவம் :**

மகத்துவமிக்க அகத்தியமுனிவர் வரத்தினால் ஏழு தலைமுறை வரையும் அருட்புலமை நிரம்ப வரம்பெற்ற பரம்

பரைச் சைவ வேளாளர் குலத்திலே ஒரு குடியிலே ஆனந்தக் கூத்தர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் குருபத்தி சிவபத்தி அடியார் பத்திகளில் சிறந்தவர். மற்றும் கல்விச் செல்வம் போலவே பொருட்செல்வமும் ஒருங்குடையவர்.

திருவருட்செல்வமும் வாய்க்கப் பெற்றவர். அவர் மனைவியார் அருந்ததியன்ன பெருந்துதிக்குரிய மயிலம்மையார் என்பவர். அவ்வம்மையார் திருவயிற்றிலே, ஏழாவது தலைமுறையாகத் தமிழ் நாடு செய்த தவத்தானே ஒரு சற்புத்திரர் திருவவதாரம் செய்தனர். முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத் திருநாமத்துடன் அவர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளருவாராயினர். அக்குழந்தை வளர வளர ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களும் வளர்வனவாயின.

இவ்வாறு, ஒருசமயம் துறைசை ஆதீனத் தம்பிரான்கள் சிவதல யாத்திரை செய்து கொண்டு பாண்டிவள நாட்டிலே பொதியில் மலைச்சாரலிலே பாவநாசம் என்னும் திருப்பதிக்குச் சென்று சிவதரிசனம் செய்து விக்கிரமசிங்கபுரத்தின் வழியே வருவாராயினர். அப்பொழுது அவ்வழியே அத்தம்பிரான்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஒரு பிள்ளைப் பருவத் திருவுருவம் தோன்றியது. தம்பிரான்கள் அந்த உருவொளியைக்கண்டு வியந்து அசைவற நின்றுவிட்டனர். அதுவே சிவஞானவொளியாம். அவ்வொளிப் பிழம்புத் தோற்றத்தை இங்கே ஆராய்வோம்.

**முக்களாலிங்கரும் முனிவர்களும் :**

முக்களாலிங்கர் ஐந்து பிராயத்திலே தாய் தந்தையாரால் வித்தியாரம்பஞ் செய்விக்கப் பெற்றுப் பாடசாலையில் அமர்ந்து கல்வி பயின்று வந்தனர். ஒரு நாள் பள்ளியினின்று வீட்டிற்கு வரும் பொழுது வழியிலே திருவாவடுதுறை முனிவர்களைக் கண்டார். தரிசித்து வணங்கினார். 'சுவாமிகள் எல்லோரும் கிருகத்துக்கு எழுந்தருளித் திருவமுது செய்து. பின்பு சென்றருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். அம்முனிவர்கள் ஆண்டில் இளையவரும் அறிவில் முதியவருமாகிய முக்களாலிங்கர் வழிபாட்டிற்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டனர். உடன்பட்ட அம்முனிவர்கள்

முக்களாலிங்கர் பின்னர் கிருகத்துக்குப் போயினர். முக்களா லிங்கரின் அருமைக் கருத்தை உணர்ந்து அருந்ததியினும் சிறந்த தாயார் மயிலம்மையார் உபசரிக்கத் திருவமுது செய்து முனிவர்கள் சென்றருளினர்கள்.

முக்களாலிங்கர் தம் கருத்தின்படி அடியார்களை உபசரித்த தாயாரைப் பற்றி ஒரு பாராட்டு வெண்பாக் கூறி மகிழ்வித்தார். அது வருமாறு.

> " அருந்ததி என்னம்மை அடியவர் கட்கென்றும்
> திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
> ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
> மானந் தவாத மயில் "

என்பது.

புறத்தே போயிருந்த ஆனந்தக் கூத்தர் வீட்டிற்கு வந்தார். நிகழ்ந்த அற்புதச்செய்திகளைக் கேட்டார். பேரின்பக் கடலிலே முழுகினர். முக்களாலிங்கரோடு ஆதீன முனிவர் களிடத்தே சென்றார். வணங்கினர். சத்திநிபாதத்து உத்த மராகிய அந்தப் புத்திரர் பிறவிப் பெருந்துன்பக் கடலினின்றும் கரையேறக் கருதினர். அம்முனிவர் பெருமக்களோடு தாம் செல்ல வேண்டும் என்னும் குறிப்பினைத் தந்தையாருக்கு உணர்த்தினர். புத்திரரைப் பிரியத் தந்தையாருக்குச் சிறிதும் மனம் இல்லை. பின்பு அவர் ஒருவாறு இசைந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

**ஞானசிரியரை அடைதல் :**

தந்தையார் நீங்கிய பின்பு முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக் கொண்டார். மார்க்கங்களிலுள்ள சிவதலங்களைத் தரிசித்துக்கொண்டு சேர நாட்டிலுள்ள சுசீந்திரத்தை அடைந்தார். மடாலயத்தினுள் புகுந்தார். ஆதீன பரம முதற் குரவராகிய நமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்தார். சின்னபட்டத்திலே எழுந்தருளியிருந்த ஞானசிரியராகிய பின் வேலப்ப தேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்துப் பேரன் போடு வணங்கினர்.

**ஸ்ரீ சிவஞான யோகிகள் என்னும் தீட்சாநாமம் :**

முக்களாலிங்கர் ஞானதேசிகரிடத்தே சைவ சந்நியாசமும், சிவ தீட்சையும், சிவஞான யோகிகள் என்னும் தீட்சா நாம

மும் பெற்றார். மெய்கண்ட சாத்திரங்களையும் கேட்டருளினார் இவர் அகத்திய மகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவ ராதலின் எளிதிலே வடமொழிக் கடலும் தென்மொழிக் கடலும் முற்றொருங் குணர்ந்தார். மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய் அமர்ந்தருளினார். ஸ்ரீ வேலப்ப தேசிகர் ஸ்ரீ சிவஞான யோகிகளுக்கு உபதேசித்தருளிய ஞானாசிரியர் என்பது

''எவ்வெவர்கோட் படுபொருளும் அஞ்செழுத்தின்
அடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை
ஓதுமுறை விளங்கத் தேற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்தாள் சென்னி சேர்ப்பாம்''

எனக் காஞ்சிப் புராணத்துக் கூறிய குருவணக்கச் செய்யு ளால் விளங்கும்.

**நூல்களும் உரைகளும் :**

ஸ்ரீ சிவஞான யோகிகள் ஜமதக்கினி முனிவருடைய புதல்வரும், அகத்திய மகா முனிவருடைய முதல் மாணவரும் இடைச் சங்கப்புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவரு மாகிய திரணதூமாக்கினி என்னும் தொல்காப்பிய முனிவர் அருளிச்செய்த இலக்கண நூலாகிய தொல்காபியத்திற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர் செய்த உரையாகிய இளம் பூரணமும், சேனாவரையர் செய்த உரையாகிய சேனாவரைய மும், நச்சினார்க்கினியர்செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படும் மூன்று உரைகளினும் உள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும் பொருட்டு, அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும் முதற்சூத்திரத்திற்கும் சூத்திர விருத்தியெனப் பெயர்பெற்றபாடியமும் வடமொழித்தருக்க சங்கிரக அன்னம் பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும் நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினார். இவை மூன்றும் திராவிட மாபாடியத்துக்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும், சர்வாத்மசம்பு சிவாசாரியார் அருளிச் செய்த சத்தியரூப சித்தாந்தப் பிரகாசிகையை அவ்வாறே மொழி பெயர்த்து அருளினர். அஃதன்றியும் ஸ்ரீ மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய வார்த்திகப் பொழிப்போடுகூடிய சிவ ஞான போதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் கள் நன்கு விளங்கும் வண்ணம் திராவிட மாபாடியமெனப் பெயர்பெற்ற விருத்தியுரையும், இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும் ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் அருளிய சிவஞான சித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரையும் செய்தருளினர்.

அன்றியும், காஞ்சிப்புராணத்தின் முதற்காண்ட மொழி பெயர்ப்பும் சிவாக்கிய சோழ மகாராஜாவின் காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரிய சரணராகிய ஸ்ரீ அரதத்த சிவாச்சாரியார் என்பார் வைணவமத கண்டனம் செய்து சைவமத ஸ்தாபனம் செய்யும் பொருட்டு நெருப்பிலே பழுக்கக் காய்ச்சிய இரும்பு முக்காலியிலே எழுந்தருளியிருந்து சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக் களாலே நாட்டியருளிய சுலோக பஞ்சகத்தின் மொழிபெயர்ப் பும் ஸ்ரீ அப்பதீட்சிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேக மூல சுலோகங்களின் மொழிபெயர்ப்பும் செய்தருளினர்.

அன்றியும், பெரும்பாலும் உண்மை நாயன்மார் சரித முதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக் காட்டாகத் திருவள்ளுவ நாயனர் திருக்குறள் உத்தரார்த்தமு மாகக் கொண்டு சோமேசர் மீது முதுமொழிவெண்பா, யமக ரூபமான திருவேகம்பரந்தாதி, திருக்ரூபமான திருமுல்லை வாயிலந்தாதி, குளத்தூர் பதிற்றுப்பத்தந்தாதி கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், குளத்தூர்அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம் மார்கழித் திருவாதிரை உற்சவத்தில் தேவாரம் முதலிய அருட் பாக்கள் ஐந்தும் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவை என்னும் திருவாசகத் திருப்பதிகம் ஒன்றுமே ஆன்மார்த்த பரார்த்தசிவ பூஜாகாலங்களில் ஓதப் பெற்றுவரும் சம்பிரதாயத் தால் நித்த நியம மந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்ய வேண்டுவோர் கருத்துத் தடையுறுவண்ணம் திருத் தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்

சிவாயமூர்த்திகள்மீது மாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினார்.

அன்றியும், மரபட்டவணை எனப்பெயர் பெற்ற திருவாவடுதுறை ஆதீன சம்பிரதாயக் கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்து எழுதியதற்கு மறுப்பின் மறுப்பு என ஒன்று செய்தருளினார்.

**சித்தாந்த மரபு கண்டன கண்டனச் செய்திகள் :**

சித்தாந்த மரபு கண்டன கண்டன மென்பது சித்தாந்த மரபும், அதன் கண்டனமும், மற்றதன் கண்டனமும் என மூன்றும், இம்மூன்றனுள் சித்தாந்த மரபு எழுதினவர் திருவாவடுதுறை ஆதீனத்தாருள் ஒருவரென்பர். சித்தாந்த மரபு கண்டன கண்டனத்துத் தொடக்கதில்,

> "குழறுபாடாய் அகப்பட்ட தொன்றனைத்
> தம்மாற் குறிக்கப் பட்டோர் கொண்ட
> மரபென மயங்கிக் கொண்டு"

என்றும் பகுதி 34ல் "...... அவ்வாறு கூறுவார் ஈண்டு யாருமில்லை, எவரோ குழறுபடையாக எழுதி வைத்த தொன்றனைக் கைப்பற்றிக் குற்றங்கூறப் புகுந்தீர். பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினன்' என்றது போல நும் அறிவின் குழறுபடைக் கேற்பவே அதுவும் குழறுபடையாய் நுமக்குவந்து வாய்த்தது"

என்றும் ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் அருளிச்செய்வதால், சித்தாந்த மரபு என்னும் நூல் திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரமாண நூல்களில் ஒன்றன்று என்பது அறியப்படும்.

மேலே காட்டப்பட்ட ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகளது திருவாக்குகளால் 'சித்தாந்த மரபுநூல் குழறுபடையான நூலென்பதும் அஃது அநாமதேயியாகிய எவராலோ எழுதப்பட்டதென்பதும், திருவாவடுதுறை ஆதீனத்து மரபு அன்று' என்பதும் தெளிவாகும். ஆனால் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் இந்தச் 'சித்தாந்த மரபு' நூலை மறுத்த சித்தாந்த மரபு கண்டன நூலுக்குச் "சித்தாந்த மரபு கண்டன கண்டனம்" அருளிச் செய்தவாறு என்னை?

என்னும் வினாப்பின் நிகழ்வதாகும். ஆசங்கத்திற்குரியன அல்லாதவற்றை ஆசங்கித்துக் குற்றம் போலச்சிலவற்றைக் கண்டன நூலார் கூறினமையின் அவற்றின் பொருந்தாமையை அறிவித்தற்கு மாதவச் சிவஞான சுவாமிகள் 'கண்டனக் கண்டனம்' அருளிச் செய்தார்கள்.

**போற்றத்தக்க கண்டன நூல்கள் :**

கண்டன நூல் என்ற மாத்திரத்தில் இக்காலத்தில் சிலருக்கு ஒரு வகை வெறுப்பு ஏற்படக் காண்கின்றேம். அங்ஙனம் வெறுப்பு ஏற்படக் காரணம் இல்லாமலில்லை. இடைப்பட்ட காலத்தில் ஏகான்மவாதிகளும் வைணவர் களும் சைவதூஷணம் செய்த காலத்தில் அவர்கள் எழுதிய நூல்களிலும் அதற்கு மறுப்பாக எழுந்த நூல்களிலும் சில இடங்களில் நூல் எழுதினார் மீதும் நூலில் கூறப்பட்டார் மீதும் வசைமொழி அடுக்குகள் காணப்படுகின்றன. ஆனால், முற்காலத்துக் கண்டன நூல்களில் விஷயங்களின் பொருந்தாமைமட்டும் விளக்கப்படும்.

இங்ஙனம் இரண்டற்கும் வேற்றுமை பெரிதாகலின், முற்காலத்துக் கண்டன நூல்கள் போற்றத்தக்கனவேயாகும். அன்றியும், அவற்றால் விளையும் பயன்களும் பலவுள. இந்தக் காரணம் பற்றியே ஒருசாரார் இந்நூல்களை எதிர் நூல் (Controversial Literature) எனப் போற்றுவாராயினர்

அன்றியும், காஞ்சிபுரத்திற்குத் தலையாத்திரையாக வந்தருளிய திருவண்ணமலை ஆதீனத்துப் பண்டாரச் சந்நிதிகள் சிவஞான சித்தியாரில் "என்னையிப்பவத்திற் சேராவகையெடுத்து" என்னும் செய்யுளில், 'எடுத்து' என்னும் சொல்லுக்குப் பொருள் என்னை " என்று தம் ஆதீனத்து ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய சிவசமவாத உரையின் உயர்வு தொனிக்கும் வண்ணம் சிவஞான யோகிகளிடத்தே வினாவுவித்தபோது 'எடுத்து' என்னும் சொல்லுக்குச் சிவசம வாதவுரை மறுப்பென ஒன்றும், அதன் மேற்பிரதி கண்டனம் உண்டாயவழி மேல் மறுத்த மறுப்பு குதர்க்க உரையாளரால் பேர்மப் படாதவாறு 'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வயிரக்குப்பாய மென ஒன்றும் சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய உரை முற்றும் போலியுரை

என விளக்கச் சிவசமவாத உரை மறுப்பு என ஒன்றும் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் செய்தருளினர்.

அன்றியும், கம்பராமாயண காவியம் ஒன்றுமே தமிழில் சிறந்திருப்பது எனச் செருக்கோடு கழறிய காஞ்சீபுரத்து வைணவர்கள் வாயை அடக்கக் கருதி அக்கம்பராமாயணத்து நாந்தியாகிய 'நாடிய பொருள் கை கூடும்' என்னுஞ் செய்யுள் முற்றும் குற்றமே எனச் சங்கை செய்தவழி, அவ்வைணவர்கள் அச்சங்கைக்கு உத்தரஞ் சொல்ல வியலாமல் மிகவும் வருந்தித் 'தெரியாது பிதற்றினேம்' எனச் சொல்லி வணங்கித் துதித்த வழி ஸ்ரீ சிவஞான யோகிகள் மகிழ்ந்து உத்தரங் கூறி அந்த வைணவர்களை உவப்பித்தருளினர். அச்சங்கை யுத்தரங்களை வரைந்த அந்த நூலுக்குக் "கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்திர விருத்தி" என்று பெயர் வழங்கி வருகின்றது.

அன்றியும், திருவாரூர் வயித்தியநாத நாவலர் இயற்றிய இலக்கண விளக்கத்தில், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக் கருதி இலக்கண விளக்கச் சூறாவளி என ஒன்று செய்தருளினர்.

திருநாவுக்கரசு நாயனர் கடலினின்றும் கரையேறிய திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்தின் கண்ணே சில வித்துவான்களும் பிரபுக்களும் கூடிய சபையில் நூறு பொன்னைக் கிழியாகக்கட்டிவைத்து 'கரையேற விட்ட முதல் வர்வுன்னை அன்றியுமோர் கதியுண்டாமோ" என்று ஈற்றடி எடுத்துக்கொடுத்து, இந்தச் செய்யுளைப் பூர்த்திசெய்பவர் "இந்தப் பொற்கிழியை எடுத்துக் கொள்ளலாம்" என்று சொன்னார்கள், அப்பொழுது யாத்திரையாக வந்தருளிய சிவஞானயோகிகள் ஆலயத்துக்கு எழுந்தருளுங்கால் அங்கு நிகழ்ந்த இச்செய்தியை உணர்ந்து ஒரு ஏழைப் பிராமணரை நோக்கி அப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளும்படி கட்டளையிட்டு,

"வரையேற விட்டமுதஞ் சேந்தனிட
வுண்டனை வல்லின மென்றாலும்
உரையேற விட்ட முதலாகுமோ
வெனைச் சித்தென்றுரைக் கிலென்னும்

நரையேற விட்ட முதலுளவனுக்
கொண்டு நறும் புலிசை மேவும்
கரையேற விட்டமுதல் வாவுன்னை
யன்றியு மோரர் கதியுண்டரோ''

என்று ஒருசெய்யுளைப் பேசுவது போலப் பூர்த்தி செய்தருளினார்.

இவ்வண்ணம் ஸ்ரீமத் மாதவச் சிவஞானசுவாமிகள் இரு மொழிக்கும் செய்த தொண்டுகள் பல. திருவாவடுதுறை ஆதீனத்தின் ஞானக்கண்ணாக, செந்தமிழ்க் காவலராக, இலக்கண வரம்பினையும் சமயவரம்பினையும் பாதுகாக்கும் சிவஞான வள்ளலாகத் திகழ்ந்து சகாப்தம் 1708 க்குச் சரியான விசுவாவசு ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் நாள் (17-4-1785) ஞாயிற்றுக் கிழமை சிவானந்தப் பெருவாழ்வு அடைந்தார்கள்.

மன்னும் விசுவா வசுவருட மேட்மதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம் —பன்னும்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்கு தினம்.''

**ஸ்ரீ மத் மாதவச் சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க!**



உ
சிவமயம்

திராவிட மாபாடியகாரர்

ஸ்ரீமத் மாதவச் சிவஞானசுவாமிகள்

அருளிச்செய்த

# காஞ்சிப் புராணம்

## -: ஒழுக்கப் படலம் :-



மாதரை யெல்லாம் வீழும் மடவனும் ஈன்ற தாயைக்
காதலன் ஆகான் அச்சீர்க் கடியனுஞ் சிவன்வாழ் வைப்பிற்
பாதகம் புரியல் காஞ்சிப் பதியிடைச் சிறிதுஞ் செய்யல்
ஓதிய விதியின் ஆறே ஒழுகுதல் முறைமைத் தாமால். 1

செந்துவர் படரும் ஆழித் தினகரன் எழுமுன் கன்னல்
ஐந்தென எழுந்து வெண்ணீ றணிந்துயர் மாவின் மூலத்து
எந்தையைக் காம நோக்கின் இறைவியை நினைந்து போற்றிப்
புந்தியின் உறத்தான் செய்யும் பொருள் அறம் சிந்தை செய்து.2

கரகமுந் தண்டும் மற்றுங் கரந்தழீஇக் காமர் ஊர்க்கு
நிருதியிற் படர்ந்து காதில் நீண்ட முப் புரிநூல் ஏற்றித்
தரணியில் திருணம் இட்டுச் சந்திகள் பகல்வ டக்கும்
இரவுதென் பாலும் நோக்கி இருந்திரண் டியக்கம் நீத்து 3

குறிஇடக் கரத்துப் பற்றிக் குறுகிநீர் முகந்திட் டோர்கால்
வெறிகமழ் புனலான் மண்ணுற் குறியினை விழுமி தாக்கி
நிறையமண் முக்கால் இட்டுக் குதங்கழீஇக் கழுவு நீள்கைக்கு
இறுதியின் ஈரைங் காலும் இருகைசேர்த் தேழு காலும். 4

அடிஏழு காலும் பூசி அறலினுற் சுத்தி செய்க
இடனுடை இல்லோர்க் கீதாம் இரட்டிமும் மடங்கு நாற்றி
கடனறி பிரம சாரி காட்டகத் துறைவோன் மற்றைக்
கெடலரும் துறவி இன்னோர் கெழுதக இயற்றல் வேண்டும். 5

மகளிர் எவரையும் விரும்பும் பெருந் தூர்த்தனுகிய அறிவிலியும் தன்னைப் பயந்த தாயை விரும்பான். அதுபோலக் கொடியனும் சிவ தலங்களில் பாவம்செய்யாதிருக்கக் கடவன். அவற்றினும் காஞ்சி நகர்க்கண் சிறிதும் பாவம் செய்யற்க நூல்களில் விதித்த வழியில் ஒழுகுதலே வழக்குடைத் தாகும். 1

பவளக்கொடி படர்கின்ற கடலில் சூரியன் தோன்று தற்கு ஐந்து நாழிகை அளவு முன்னெழுந்து திருநீற்றினை அணிந்து உயர்ந்த மாவடியில் எழுந்தருளும் எந்தையையும் காமாட்சியம்மையையும் எண்ணிப் போற்றிப் பின் அறிவில் நன்கு பொருந்தத் தான் செய்யவேண்டிய பொருளையும், அறத்தையும் சிந்தித்து, 2

கமண்டலமும், தண்டமும், பிறவும் கைக்கொண்டு அழகிய ஊர்க்கு அப்பால் தென்மேற் றிசையிற் சென்று முப் புரி நூலை வலக் காதில் சுற்றிக்கொண்டு பூமியில் துரும்பை இட்டு உதயத்தில் வடக்கு நோக்கியும் அத்தமனத்தில் தெற்கு நோக்கியும் இருந்து மலசலங்களைக் கழித்து. 3

குறியை இடக்கையில் பற்றி நீரைக் குறுகிய கைப் பாத் திரத்தில் முகந்து ஓர்முறை நீராலும் மண்ணாலும் அக்குறியைத் தூய்மை செய்து மும்முறை மண் சேர்த்துக் குதத்தைக் கழுவிக் கழுவிய இடக்கையைப் பத்து முறையும் இரு கை யையும் சேர்த்து ஏழு முறையும், 4

கால்களை ஏழுமுறையும் கழுவி மண்கொண்டு தூய்மை ஆக்குக. இம்முறை மனை அறம் காப்பவர்க்கு விதித்த தாகும் பிரமசாரி இரு மடங்கும் வானப் பிரத்தன் மும்மடங்கும் சந்நியாசி நான்கு மடங்கும் இங்ஙனம் செய்தல் வேண்டும். 5

கேணர்வுறு நீர்வாய்ப் பெய்து கொப்புளித் திருகால் தூய்மை
அணைய்நீர் குடித்துப் பின்னர் அணிவிரல் உறுப்புத் தீண்டல்
இணைவிழைச் சுணவு மாற்றீ ரியக்கமுற் றிடில்நா லெண்கால்
இணையிலச் சிரண்கா லெண்காற் கொப்புளித் திடுதல்
வேண்டும். 6

சலமலம் விடுக்கும் போதும் தையலார் கலவிப் போதும்
குலவெரி வளர்க்கும் போதும் வெண்பல்கோல் தின்னும் போதும்
உலவுநீர் குடையும் போதும் உணவினும் பேசல் செய்யார்
மலவலி துரக்கும் எங்கோன் வகுத்தநூல் முறையில் நிற்போர். 7

விதித்தகோல் தின்று தூய மென்புனல் படிந்து மேனி
கதிர்ப்பநீ றணிந்து சந்திக் கடன்புரிந் துறுபே ரன்பின்
முதிர்ச்சியின் இலிங்க பூசை நாள்தொறும் முட்டா தாற்றித்
துதித்தனர் காலந் தோறும் ஏகம்பந் தொழுது போற்றல். 8

இம்முறை ஒழுக்கின் மாறு தியங்குறும் பிரம சாரி
செம்மணி வடிவிற் கம்பர் திருவருள் கிடைத்தல் வேண்டி
இம்மரில் குரவன் மாட்டே மறையெலாம் முறையின் ஓதல்
மும்மறை இரண்டொன் றுனும் முற்றுறப் பயிறல் வேண்டும். 9

மடங்கலிற் கன்னி தன்னின் மதிநிறைந் துறுநாள் ஓதத்
தொடங்குக மகரத் தந்நாள் துகளற முடிக்க மீண்டு
முடங்குறும் வெண்கேழ்ப் பக்கத் தோதுக அங்க மாதி
உடங்குதேய்ப் பக்கத் தோதல் விலக்குநாள் ஓதல் வேண்டா. 10

செவ்விநாண் உடையே தண்டந் திகழ்முந்நூல் உத்தரீயும்
அவ்வவர் தமக்கு வெவ்வே றருமறை விதித்த வாற்றால்
எவ்வமில் மறையோ ராதி மூவரும் இயல்பிற் கொள்க
செவ்வழல் விதியின் ஓம்பி அணிக அத் திருவெண் ணீறே. 11

நீரைக் கொண்டு வந்து வாயில் விட்டு இருமுறை கொப்புளித்து உமிழ்ந்து தூய்மையுண்டாக இருமுறை ஆசமனம்செய்து பின்னர் மோதிரவிரலால் அங்கங்களைத் தொடுக. (அங்கநியாசம் கரநியாசம்). புணர்ச்சியுறின் முப்பத்திரண்டு முறையும் உணவிற்குப் பின் பதினாறு முறையும், மலசல மோசனத்திற்குப் பின்பு எட்டு முறையும் வாய்கொப்புளித்திடல் வேண்டும். 6

மலவன்மையைக் கெடுக்கும் எமது பெருமான் விதித்த நூல்வழி நடப்பவர் சலம் மலம் விடும்போதும், கலவிக் காலத்தும், வேள்வி செய்யும் பொழுதும், பல் துலக்கும் போதும், அசைகின்ற நீராட்டுக் காலத்தும், உணவுகொள்கையிலும் உரையாடார். 7

ஆல்வேல் முதலிய விதித்த கோலால் பற்களைத் தூய்மை செய்து, தெண்ணீரில் மூழ்கித் திருமேனியில் ஒளியெழத் திருநீற்றினை அணிந்து சந்தியாவந்தனத்தை முடித்து மிக்க பேரன்பின் முறுகிய நிலமையால் சிவலிங்க பூசனையை நாடொறும் வழுவாது செய்து துதித்தனராய்க் காலங்கள் தோறும் சென்று திருவேகம்பரைத் தொழுதுபோற்றுக. 8

இவ்வாறு வழுவாது ஒழுகும் பிரமசாரி மாணிக்க வண்ணராகிய திருவேகம்பர் திருவருள் வாய்த்தலை விரும்பி மயக்கமில்லாத (தெளிவுடைய) ஆசிரியரிடத்தே வேதங்கள் அனைத்தையும் மரபொடும் ஓதுக. மூன்று வேதங்களில் இரண்டொன்றுயினும் திரிவையங்களின்றி முழுவதும் பயிற்சியுற வேண்டும். 9

சிங்கம், கன்னி எனப்படும் ஆவணி புரட்டாசி மாதங்களில் பௌர்ணிமை கூடும் நாட்களில் நூல் பயிலத் தொடங்குக. மகரத்து அந்நாள் ஆகிய தை மாதத்துப் பௌர்ணமியில் குற்றமறப் பூர்த்தி செய்க. அடுத்து வளரும் (வெண்கேழ்) சுக்கிலபட்சத்தில் அங்கங்கள் உபாங்கங்கள் ஆகிய இவற்றை ஓதத் தொடங்குக. இருட்டின பக்கத்தும் விலக்கிய நாட்களிலும் தொடங்குதல் கூடா. 10

அரைநாண், அரைக்காடை கோல், முந்நூல், மேலாடை, நூல் விதித்தவாறு பார்ப்பனர் அரசர், வணிகர் எனப்படும், முத்திறத்தவரும் தம்மியல்பிற் கொள்க. விதிப்படி வேள்வியைக் காத்துத் திருவெண்ணீற்றை அணிக. 11

முன்னிடை கடையின் ஒன்றப் பவதிச்சொல் மொழிந்து
பார்ப்பார்
மன்னவர் வணிகர் பிச்சை ஏற்பது மரபாம் ஆயுள்
முன்னுறும் இளையர் தம்மின் மூத்தவர்ப் பணிக தாழ்ந்த
பின்னவர் தமக்கு மூத்தோர் வாழ்த்துரை பேசல் வேண்டும். 12

ஓதிய பிரம சாரி ஒழுக்கினில் வழாது நின்று
மூதரு மறைநூல் கற்றோர் முனிவர் தங் கடனில் தீர்ந்து
வேதமா மூலத் தெங்கோன் திருவருள் மேவப் பெற்றுப்
பேதமில் பெருவீட்டின்பப் பேற்றினுக் குரிய ராவார். 13

பின்னவர்கள் பற்றிகந்து பத்தியினால்
திருக்காஞ்சிப் பேரூர் வாழ்க்கை
மன்னுதல்வேட் டனராயின் ஏகம்பன்
றனக்கணித்தாம் இருக்கை வைகிப்,
பன்னருஞ்சீர்க் கண்டிகைநீ றுடல் வயங்கச்
செய்பணிகள் பலவும் ஆற்றித்
துன்னியமாந் தருமூலச் சுடரொளியை
முட்டாது தொழுது வாழ்வார். 14

வற்றரு மறைஅவ்வா றோதி வாழ்க்கையிற்
பற்றில னாயிடிற் குரவன் பால்என்றும்
உற்றினி துறைகப்ப் றுண்டைய னேயெனில்
பெற்றியின் அருட்குரு இசைவு பெற்றரோ 15

கடவுளர் பிதிரர்தங் கடன்கள் நீக்குவான்
வடுவறும் இலக்கணம் மாண்ட கற்பினின்
மிடலுடைக் கிழத்தியை விதியின் வேட்டுப்பின்
நெடுமனை வாழ்க்கையின் ஒழுகல் நீதியே. 16

கருதுமுப் புதிற்றிரு கவள மென்பதம்
இருபொழு துண்டலும் எச்சம் ஐவகை
புரிதலும் விதித்தநாள் மனைவி பூண்முலை
மருவலும் இனையவும் இவர்க்கு மாணுமே. 17

'பவதி' என்னும் சொல்லைப் பிராமணர் முதலான மூவருணத்தவரும் முறையே முதலிலும், இடையிலும் கடையிலும் கூட்டிப் 'பவதி பிட்சாந் தேகி', 'பிட்சாம் பவதி தேகி, பிட்சாந் தேகி பவதி எனப் பிட்சை ஏற்றல் சம்பிர தாயமாகும். ஆயுள் வளர விரும்புகின்ற இளையர் தம்மினும் வயதின் மூத்தோரை வணங்குக. வணங்கிய பின், வணங்கப் பட்டோர் வணங்கினோர்க்கு வாழ்த்துரை கூறுவாராக. 12

முற்கூறிய பிரமசரியத்தில் தளராது நின்று பழமறை களைக் கற்றோராகிய முனிவர்தம் கடனைக் கேள்வியான் முற்றுவித்து வேதமாகிய மாவடியில் எழுந்தருளுகின்ற திருவேகம்பர்தம் திருவருள் கைவரப்பெற்று ஒன்றுபடும் முத்திப் பேரின்பத்திற்குரிமை உடையவராவர். 13

நான்காம் வருணத்தவர் இருவகைப் பற்றும் விட்டு மெய் யன்பினுல் திருக்காஞ்சியாகிய பெருநகரில் வாழ்தலை விரும் பினராயின் திருவேகம்பர் ஆலயத்திற்கு அணித்தாக ஓரிடத் தில் இருந்து சொல்லுக் கடங்காத சிறப்பினையுடைய உருத்தி ராக்கத்தையும் விபூதியையும் விளங்க அணிந்து செயத்தக்க தொண்டுகள் பலவற்றையும் செய்து மாவடியில் முளைத்த பரஞ்சுடரை வழுவாது தொழுது வாழ்வார் 14

தழைத்த மறைகளை மேலே கூறியவாறு கற்று இல்லற வாழ்வில் விருப்பிலன் ஆயின் ஆசாரியனிடத்துத் தங்கி வாழ்க, விருப்புடையன் ஆயின் உரிய முறையின் அருட்குருவின் சம்மதத்தைப் பெற்று. 15

தேவர், தென்புலத்தார் தம் கடன்களை முடித்தற் பொருட்டுக் குற்றமற்ற இலக்கணத்தால் மாட்சிமையுடைய கற்பினுல் திண்ணிய உரிமையை விதிப்படி திருமணம் புரிந்து கொண்டு மனை அறத்தில் ஒழுகுதல் முறையே 16

ஒரு வேளைக்கு முப்பத்திரண்டு கவளமாக இருவேளை உணவு கொள்ளலும், ஐவகை வேள்வியை யியற்றலும், விதித்த நாட்களில் மனைவியொடு கலத்தலும் ஆகிய இவை இவர்க்குச் சிறக்கும். 17

ஓமெரி சமிதையின் ஓம்பல் தெய்வமாம்
ஏதமில் பிதிருக் கீதல் அன்னதாம்
பூதருக் கிடுபலி பூத எச்சமே
வேதியர்க் கோதனம் வீசல் மானிடம். 18

பெருமறை ஓதுதல் பிரம எச்சம்இவ்
விருமகம் ஐந்தனுட் பிரம எச்சந்தான்
திருமிகச் சிறத்தலில் தெய்வ வேதியர்
ஒருதலை யாகஈ தோம்பல் வேண்டுமால். 19

வைகறை எழுந்துசெய் வினைகள் மாண்டகச்
செய்துமா நகர்ப்புறத் தொழுகுந் தெய்வநீர்
எய்தினர் குடைந்துவெண் டுகில்இ ரண்டுடுத்
தைதுறு கண்டிகை நீற ணிந்துபின். 20

வண்புதல் தருப்பைமேல் வைகி மும்முறை
ஒண்புனல் வேதங்கள் உவப்ப ஆசமித்து
எண்பெற வாய்துடைத் தியல்பில் தீண்டியே
பண்பயில் மறைகளைப் படித்தல் வேண்டுமால். 21

மாதவப் பேற்றினன் மறைகள் அண்ணலைச்
சூதமாய் நிழற்றலில் தொல்லை ஏகம்ப
நாதனுக் கினியதிப் பிரம நன்மகம்
மேதகும் அறங்களுள் மிக்க தாகுமால். 22

ஆற்றலுக் கியையஎவ் வளவைத் தாயினும்
போற்றரு மறையினைப் போற்றி மேதகச்
சாற்றுகா யத்திரி சதவு ருத்திரம்
ஏற்றஐந் தெழுத்திவை விதியின் எண்ணியே. 23

அனைத்தினும் நிறைந்துறை அடிகள் பூசனை
தனக்குறு திருப்பள்ளித் தாமங் கொய்துபோய்
மனைத்தலை வைத்துமேல் வாழ்க்கைக் கேய்ந்தன
எனைத்துள கருமமும் இயல்பின் நாடியே. 24

விதித்த சமித்துக்களைக் கொண்டு வேள்வி செய்தல் தேவயாகம். துன்பில்லாத தென்புலத்தார்க்குத் தருப்பணம் செய்தல் பிதிர்யாகம். பலியிடல் பூதயாகம். பிராமணர்க்குச் சோறு வழங்கல் மானுட யாகம். 18

வேதம் ஓதுதல் பிரமயாகம் எனப்படும். இவ்வைந்து வகையுள் பிரமயாகம் தெய்வத் தன்மை மிக்கமையால் தெய்வத் தன்மையுடைய பிராமணர் துணிவாக இதனைக் கடைப்பிடிக்கவேண்டும். 19

விடியற் காலையில் துயிலெழுந்து காலைக் கடன்களை முடித்த பின்பு பெரிய நகரின் மருங்கே ஓடும் ஊறும் நதி முதலிய தீர்த்தங்களை அடைந்து மூழ்கி வெள்ளிய ஆடை இரண்டனை உடுத்து அழகு மிகும் உருத்திராக்கமும் திருநீறும் அணிந்ததன் பின், 20

தருப்பாசனத்தில் இருந்து வேதங்கள் மகிழத் தெய்வ நீரை ஆசமனம் செய்து கருத்துடன் வாயைத் துடைத்து தொடுமிடங்களை மந்திரத்துடன் மோதிர விரலால் தொட்டு சந்தத்துடன் கூடிய வேதங்களை ஓதுதல் வேண்டும். 21

பெருந்தவப் பயனால் வேதங்கள் பெருமானுக்கு மா மர மாய் நிழல் செய்தலின், இப்பிரமயாகம் (வேதம் ஓதல்) திரு வேகம்பப் பெருமானுக்கு உவப்பாவது. மேன்மைபொருந்திய அறங்கள் பலவற்றுள்ளும் தலையாயதும் ஆகும். 22

தத்தமக்கு முடிந்த நிலையில் எத்துணைச் சிறு பொழு தாயினும் துதித்தற்கரிய வேதங்களை ஓதி எடுத்தோதப்படும் காயத்திரி சத உருத்திரம், இயைந்த பஞ்சாக்கரம் இவற்றை விதித்தபடி கணித்து, 23

எவற்றினும் நிறைந்துறையும் சிவபிரானார் பூசனைக்குத் தக்க திருப்பள்ளித் தாமத்திற்குரிய மலர்களைக் கொய்து கொண்டு போய் மனையில் தொடுத்தற்குரிய இடத்தில் வைத்து மனைவாழ்க்கைக்கு வேண்டும் எவ்வகைச் செயல்களையும் ஒழுங்குபட ஆராய்ந்து முற்றுவித்து, 24

கதிரவன் உச்சியி னணுகுங் காலையின்
முதுசிவ கங்கைநீர் முறையின் மூழ்குபு
மதியுறு நியதிகள் முடித்து மாநிழல்
அதிபனை முறையுளி அணைந்து போற்றியே. 25

மீண்டுதன் மனைவயின் மேவித் தற்பொருட்டு
ஈண்டிய அருட்குறி இறைவன் அர்ச்சனை
பூண்டபே ரன்பினிற் புரிந்து பூசனைக்கு
ஆண்டுறுப் பெனப்படும் அழலும் ஓம்பியே 26

அறமுதல் இழிஞர்ஈ றான வற்றினுக்கு
உறுபலி உதவிஊங் கெச்சம் ஐவகை
முறையுளி யாற்றிஅவ் வேலை முன்னிய
பெறலரு விருந்தினர் பேணி ஊட்டியே. 27

நீத்தவர்க் கையமும் நேர்ந்து நோயினர்
வாய்த்தவெஞ் சூல்முதிர் மகளிர் பிள்ளைகள்
மூத்துறு கிழவரை முந்த ஊட்டிப்பின்
ஏத்துறு கிளைஞரோ டுண்டல் ஏயுமால். 28

கங்கைவார் சடிலக் கடவுளை நினைந்து
கறிதயிர் நெய்யுடன் ஆவி,
அங்கியை எழுப்பி ஆகுதிச் செய்கை
யாகமுப் பதிற்றிரு கவளம்
பங்கமில் விதியாலுண்டுகை பூசிப்
பாகடை தின்றதன் பின்னர்ப்,
பொங்குபே ரன்பின் ஒக்கலோ
டமர்ந்திப் புராணமே கேட்டிடல் வேண்டும். 29

நான்மறைப் பொருளாய்க் கதைக்கெலாம்
இடனாய் நாற்பயன் உதவும்ஏ கம்பன்
மேன்மையுங் காம நோக்குடை
இறைவி மேன்மையும் விளக்குவ திதுவே
நூன்முறை வருண நிலைகளின் ஒழுக்கம்
நுண்ணிதின் தெரிப்பதும் இதுவாம்
பான்மையாற் காஞ்சிப் புராணமே
நாளும் பயில்வுறக் கேட்பது மரபால். 30

உச்சிப்போதில் அறிவுருவான சிவகங்கையில் முறைப் படி மூழ்கி மதிப்புடைய நியமங்களை முற்றுவித்துத் திரு வேகம்பப் பெருமானை விதிப்படி அடுத்துப் பரவி, 25

திரும்பித் தன் மனையைச்சேர்ந்து ஆன்மார்த்தமாக எழுந் தருளியுள்ள சிவலிங்க பூசனையைப் பேரன்பினால் செய்து அப் பூசனைக் கங்கமாகிய சிவாக்கினியையும் வழிபாடு செய்து, 26

காக்கைக்குப் பலியிடல் முதலாக இழிந்தவர் கடையாக எவற்றுக்கும் பொருந்திய பலியையிட்டு ஐவகை யாகங்களை முறைப்படி முடித்து அப்பொழுது அடுத்த பெறற்கரிய விருந் தினரை விரும்பி உண்பித்து, 27

துறந்தவர்க்குப் பிச்சையிட்டு நோயுற்றவர் நிறை கருவுற்ற மகளிர், குழவிகள், வயதான முதிர்ந்தவர் இவர் தம்மை முன்னர் உண்பித்துப் பின்பு ஏற்றமிக்க உறவின ரோடு உண்ணுதல் தகும். 28

கங்காதரராகிய பெருமானைத் துதித்து உள்ளே அனலை எழுப்பிக் கறிகள், தயிர், நெய் இவற்றுடன் வேள்வியிலிடும் அவிசாக முப்பத்திரண்டு கவளம் குற்றமில்லாத விதியினால் உண்டு கையையும் வாயையும் தூய்மை செய்து தாம்பூலம் தின்று பிறகு சுற்றத்தாரையும் உடன் வைத்துத் தழைத்த பேரன்பொடும் இருந்து காஞ்சிப் புராணத்தையே செவி மடுக்க வேண்டும். 29

நான்கு வேதங்களின் பொருளாயும், எல்லா வரலாறு களையும் தன்னுட் கொண்டதாயும், அறம் பொருளின்பம் வீடுகளை அளிப்பதாயும், திருவேகம்பர் காமாட்சி இவர் தம் மேன்மையை விளக்குவதாயும், நூல் வழக்குகளையும், வருணம் ஆசிரமம் இவற்றின் ஒழுக்கங்களையும் நுட்பமாக எடுத்து விளக்குவதும் இக்காஞ்சிப் புராணமே ஆகும். இயல் பினாலும் இதனையே நாடோறும் அடிப்படட்டுவரக் கேட்டலும் வழக்காம். 30

அலர்கதிர் என்றூழ் மறைந்திடுங் காறும்
ஆன்றவர் படித்திடக் கேட்டுக்
குலவுசீர் அந்தி செய்கடன் முற்றிக்
கோயிலைக் குறுகிஏ கம்பத்,
தலைவனைத் தொழுது மனைவயி னணுகிச்
சமிதையின் அங்கிவேட் டமர்ந்து
பலருடன் அருந்தி மனைவியோ டிரவிற்
பள்ளியின் மேவுதல் விதியே. 31

தருக்குறு வனப்பிற் பிறர்க்குரி யவரைத்
தவ்வையில் தங்கையிற் காண்க,
உருத்திர கணிகை மகளிரைத் தாயின்
உன்னுக வயிணவ மடவார்
அருப்பிளங் கொங்கைத் தாதிகள் மாட்டும்
அன்னதே யாகலிற் புணர்ச்சி
விருப்பினை அவர்பால் மறப்பினும் எண்ணல்
ஓம்புக நன்னெறி விழைவார். 32

இருட்சுரி கருமென் மலர்க்குழல் மனையாள்
இளமுலைப் போகமும் மகவின்
பொருட்டெனக் கொண்டே விலக்குநாள் ஒழித்துப்
புணர்ந்தபின் நீங்கிவெம் பாந்தள்
அரைக்கசைத் தருளும் அடிகளீ ரடியும்
அகந்தழீஇத் துயிலுக மற்றீங்கு
உரைத்தவா றென்றும் ஒழுகுநர் எங்கோன்
திருவருட் குரியவ ராவார். 33

கச்சிமா நகரிற் கம்பநா யகன்முன்
கரிசறுத் தான்றவர் முகப்பு
அச்சுவம் ஆடை ஊண்முதல் தானம்
ஆதரித் தியைந்தவை அளித்தல்
பொச்சமில் அவ்வக் கொடைப்பெரும் பயன்
ஒன்றனந்தமாய்ப் பொலிவும்அவ் வரைப்பின்
நச்சிமெய் யுணர்வு கொளுத்துவோன்
வீடு நணுகும்மேம் பட்டதித் தானம். 34

சூரியன் மறையுமளவும் அறிவொழுக்கங்களான் நிரம்பியவர் உரைக்க விரும்பிக்கேட்டுச் சிறப்பு விளங்கும் அந்த மன காலத்தில் அனுட்டானம் முதலிய முடித்துக் கோயிலை நெருங்கித் திருவேகம்பரை வணங்கி வீட்டிற் புகுந்து அக்கினி காரியம் செய்து பலருடனும் இருந்து உணவருந்தி மனையாளுடன் இரவில் படுக்கையிற் பொருந்துதல் விதியாகும். 31

இறுமாந்தற்குரிய பேரழகுடைய பிறர் மனைவியரைத் தமக்கையர் தங்கையராக வைத்து மதிக்க. கோயிற் றொண்டு செய் உருத்திர கணிகையரைத் தாயென எண்ணுக. திருமால் கோயிற் பணிப்பெண்கள், மொட்டனைய இளங் கொங்கையையுடைய வீட்டேவற் பெண்டிர்கள் ஆகிய இவர் திறத்தும் அத் தாயுணர்ச்சியே எய்துக. அறவழியை விரும்புவோர் யாவரும் கலவியின்பத்தை ம ற ந் து ம் எண்ணுதலைப் பரிகரிக்க. 32

இருண்டு நெய்த்து சுரிந்து தோன்றும் மலரணிந்த கூந்தலையுடைய மனைவியினிடத்துப் பெறும் போகத்தையும் மகவு பெறற் பொருட்டெடன மதித்து விலக்கிய நாள்களில் விலக்கி விதித்த நாட்களில் அம்மனையாளைக் கலந்து பின் பிரிந்து பாம்பை உதரபந்தனமும் (அரைக்கச்சு) ஆக வீக்கியருளும் சிவபிரானார் திருவடிகளை மனத்துட்கொண்டு தனித்துத் துயில்க. இங்குக் கூறியவாறென்றும் ஒழுகுவோர் இறைவன் திருவருட்குப் பாத்திர ராவர். 33

காஞ்சியில் திருவேகம்பர் திருமுன்பு குற்றம் நீங்கி உயர்ந்தோர் கொள்ளும்படி குதிரை, ஆடை உணவு, முதலாம் இவற்றை அன்றித் தம்மால் இயைந்தவற்றைத் தானம் விரும்பிக் கொடுக்க. அவ்வப் பொருளுக்கு ஏற்பக் கொடையினால் வரும் மெய்ப் பெரும் பயன் ஒன்று பலமடங்காய்ப் பெருகும். அச்சந்நிதியில் விரும்பி மெய்யறிவைப் புகட்டும் ஆசிரியன் வீட்டினைத் தலைப்படும் அத்துணைச் சிறப்புடையது அவ்விடம். 34

ஓதல்வேள் வீகை ஓதுவித் திடல்வேட்
பித்தல்ஏற் றலுமுறும் மறையோர்க்
காதியின் மூன்ருே டளித்திடல் ஊர்தி
படைத்தொழில் அரசருக் குரிய
ஆதியின் மூன்று வாணிகம் பசுஏர்
வணிகருக் காகுமங் கவற்றுள்
ஆதியின் மூன்றும் அல்லவை முறையே
அவ்வவர் விருத்திகட் காமால். 35

இருதமோ டமிர்த விருத்தியும் ஆன்ருேர்க்
கிசைவன மிருதமும் ஆகும்
தருபிர மிருதஞ் சத்தியா நிருதம்
தழுவலும் ஒன்றுநாய் விருத்தி
ஒருவலே வேண்டும் உஞ்சநல் விருத்தி
இருதமாம் ஒன்றிர வாமல்
வருவதே அமிர்தம் இரந்துறல் மிருதம்
உழவின்வந் துறல்பிர மிருதம். 36

சத்தியா நிருதம் வாணிக விருத்தி
தாழ்வுறுஞ் சேவகஞ் செய்யல்
வைத்தநாய் விருத்தி ஆதலின் அதனை
மாற்றியே இருபிறப் பாளர்
ஒத்ததோர் தூய விருத்தியால் தம்மை
ஓம்பிமெய்ந் நூல்பல பயின்று
தத்தமக் குரிய நியதியின் ஒழுகித்
தங்குதல் மரபெனப் படுமால் 37

க்கைசெவி சென்னி கழுத்தினெப் போதுங்
கண்டிகை அணிதல்வெண் ணீறு
மெய்யெலாம் பூசி ஐந்துமூ விடத்தும்
விலங்குமுப் புண்டரம் பொறித்தல்
வைதிக நிலையோர் மரபென மறைநூல்
வகுத்திடும் ஆதலின் இவற்றைக்
கைவிடா தென்றுங் கடைப்பிடித் திடுக
இகழ்ந்திடிற் கடையரே யாவார். 38

ஓதல், வேட்டல், ஈதல், ஓதுவித்தல் வேட்பித்தல் ஏற்றல் என்னும் இவ்வாறும் வேதியர்க்குரியன. முன்னுள்ள மூன்ருகிய ஓதல், வேட்டல், ஈதல் என்னும் இவையும் காவல் செய்தல், ஊர்தி பழகல், படைக்கலப் பயிற்சி என்னும் இவையும் ஆக ஆறும் அரசர்க் குரியன. முன் மூன்ருகிய ஓதல், வேட்டல், ஈதல் என்னும் இவையும் வாணிபம் செய்தல், ஏருழுதல், பசுக்காத்தல் என்னும் இவையும் ஆக ஆறும் வணிகர்க் குரியன. பின்னுள்ள மூன்றும் மூவகையவர்க்கும் தந்தமக்குப் பிழைப்புத் தொழிலாகும். 35

இருதமும், அமிர்தமும் வயிறு வளர்த்தற்கு மூவகையருளும் தக்கோர் மேற்கொள்ளத் தகுவன. மிருதமும் சிறப்பின்று எனினும் கொள்ளுதலும் ஒருவாறு பொருந்தும். பிரமிருதமும், சத்தியாநிருதமும் ஆகிய இரண்டனையும் விலக்கல் வேண்டும். ஒருவாறு தழுவிக்கொள்ளலும் ஆகும். நாய் விருத்தி எனப்படும் ஒன்றனை விலக்கலே வேண்டும். நல்ல உஞ்சவிருத்தியாவது அறுக்கப்பட்ட வயல்களில் சிந்திக் கிடப்பவற்றைப் பொறுக்கிப் பிழைத்தல் ஆகும். அஃது இருதம் எனப்படும். பிறரை இரவாமல் வருபொருள் அமிருதம் எனப்படும். யாசித்துப் பெறின் அது மிருதம் ஆகும். உழவாற் பெற்றது பிரமிருதம். 36

வாணிகத்தால் வாழ்தல் சத்தியாநிருதம் ஆகும். தாழ்வு மிகும் சேவகம் எனப்படும் பிறர் ஏவலின் நின்று வாழ்தல் நாய்விருத்தி ஆகும். அந்நாய் விருத்தியை விலக்கி முதல் மூன்று வருணத்தவரும் தமக்குப் பொருந்தியதோர் நல்வழியால் தம்மைக் காத்து மெய்ப்பயனைக் காட்டும் நூல்கள் பலவும் பயின்று தத்தம் வருணத்திற்கு விதித்த வழியில் நடந்து அடங்குதல் வழக்கு ஆகும். 37

கைகள், காதுகள், கழுத்து ஆகிய இவ்விடங்களிலும், தலைமேலும் எப்பொழுதும் உருத்திராக்க மணிதலும் வெண்ணீற்றை மெனிமுற்றும் பூசிப் பதினெந்திடங்களில் ஒளி விடுகின்ற திரிபுண்டரம் தீட்டுதலும் வைதிக வழக்கினர் இயல்பென நூல்கள் இயம்பும் ஆகலின் இவற்றை வெறுத்தொதுக்காது எந்நாளும் கைக்கொண்டொழுகுக. பழித்திடில் கீழோரே ஆவர் அவர். 38

வைதிக சைவ நெறிகளைப் பற்று
மாண்பிலாச் சூத்திரர் முதலோர்க்
கைதுமீப் போய புண்டர மாதி
அணியலாம் ஏனையர்க் காகா
மெய்திகழ் மறைகள் ஆகமம் விதித்த
கருமம்மற் றினையன பிறவும்
உய்தியை வேட்டோர் ஆசரித் தொழுகி
விலக்கின ஒழிவது முறையே. 39

தவத்தினுற் செருக்கல் கண்டது விளம்பல்
பொய்யுரை சாற்றுதல் ஐந்தும்
அவித்தஅந் தணரை இகழுதல் யாதும்
அளித்தது புகழ்ந்தெடுத் துரைத்தல்
எவற்றினை யானுங் கொலைசெயல் பிறர்பால்
இடுக்கணை யுறுத்துதல் குறளை
செவிப்புகப் புகறல் பூப்புடை மனையைத்
தீண்டலும் வழுவெனப் படுமால். 40

மனைவியோ டுண்டல் அவளுடன் துயிறல்
மனைவிஆ வித்துழிப் பசிப்பில்,
வினை இகந் தியல்பான் இருப்புழி உண்ணும்
வேலையும் ஆங்கவட் பார்த்தல்,
கனைக்கதிர்த் தேவைக் கிழக்கெழுங் காலை
மேல்கடற் பால்விழுங் காலைப்,
பனிவிசும் புச்சி யுற்றிடுங் காலைப்
பார்த்தலும் பழுதெனப் படுமால். 41

உடையொழிந் திருநீ ராடுதல் ஆடை
ஒன்றுடுத் துண்டல்ஈ ரியக்கம்
நடைவழிச் சாம்பர் ஆனிலை தீநீர்
நள்ளுற விடுதல்ஆங் குமிழ்தல்,
உடையிலா மாதை நோக்குதல் இருகால்
ஒளிர்ந்தசெங் கனலிடைக் காய்ச்சல்,
இடையுறும் அந்தி வேலையின் அருந்தல்
இவைகளும் விலக்கெனப் படுமால். 42

வேதநெறி சைவ நெறிகளைப் பின்பற்றுதற்குரிய மூவருணத்துட் பிறக்கும் பேறில்லாத சூத்திரர் முதலானோர்க்கு ஊர்த்துவ புண்டரம் முதலாக அணிதல் தகும். பிறர்க்கு அங்ஙனம் அணிதல் தக்கதன்று. உண்மை விளங்கும் வேதாகமங்கள் விதித்த கருமங்கள் ஆகிய இங்குக் கூறியவும் பிறவும் கடைத்தேறுதலை விரும்பினோர் கைப்பற்றி நடந்து, விலக்கிய தீயவழிகளைக் கைவிடுதல் தக்கதென்க. 39

தவஞ்செய்து இறுமாப்புறல், கண்டவற்றைப் பறை சாற்றல், பொய்ம்மொழியைப் பரப்புதல், ஐம்பொறிகளைப் புறஞ்செலாது அடக்கிய அந்தணரைப் பழித்தல், மிகச்சிறு கொடையையும் தற்பெருமை பாராட்டல், வறிதேயும் கொலைசெயல், பிறரைத் துன்புறுத்தல், புறங்கூறலைக் கேட்க விரும்புதல், புறங்கூறல், மாதவிடாயுற்ற மனைவியைத் தீண்டல் ஆகிய இவை குற்றம் எனப்படும். 40

மனைவியை உடன்வைத் துண்ணல், கலந்தபின் வேறு துயிலாது அவளுடன் துயிலல், அவள் கொட்டாவி விடும் போதும் பசித்துள்ள போதும் வேலையின்றி இருக்கும் பொழுதும் உண்ணும்பொழுதும் அவளை நோக்குதல், சூரியன் எழும்பொழுதும், மறையும்பொழுதும், உச்சிப்போதும் ஆகிய இம் முக்காலங்களில் சூரியனைக் காணுதல் ஆகிய இவையும் குற்றம் எனப்படும் 41

பெரிய நீர்நிலைகளில் உடையின்றி நீராடல், ஆடை ஒன்றுடுத் துண்ணல், வழியிலும், சாம்பலிலும், பசுக்கள் கூடுமிடத்திலும், தீயிலும், நீரிலும், சலம் மலம் விடுதல், அவற்றில் எச்சி லுமிழ்தல், நிருவாண மகளிரை நோக்கல், நெருப்பிடைக் காலைக் காய்ச்சல், சூரியன் மறையும் அந்திப் போதில் உண்டல் இவைதாமும் வழுவெனப்படும். 42

இந்திர திருவில் விசும்பிடை நோக்கி
ஏனையர்க் கறிவுறக் காட்டல்
நிந்தையின் வாளா பேரிகல் விளைத்தல்
கையிணை குவித்துநீ ரருந்தல்
செந்தழற் கடவுள் வான்பசு பார்ப்பார்
தேவர்கள் ஞாயிறு குரவர்
இந்துவின் முன்னர் இச்சையா றிருத்தல்
இன்னவுந் தீங்கெனப் படுமால் 43

கேழுகிர் உரோமந் துணித்திடல் உகிராற்
பல்லினைக் கிளைத்திடல் தனியே
பாழ்மனைத் துயிறல் கண்படை எழுப்பல்
முடிவட பாலின்வைத் துறங்கல்
ஆழ்துரும் பொடித்தல் ஒட்டினை அடித்தல்
தனிவழிச் செலல்பிறர் அணிந்த
காழகஞ் செருப்பு முதலிய அணிதல்
இனையவுங் கடிந்திடப் படுமால். 44

அறக்கடை மிகும்ஊர் பெரும்பிணி யுறும்ஊர்
அமர்இழி குலத்தவர் பதிதர்
மறக்கொடுந் தொழிலோர் துவன்றும்ஊர் வைகல்
வரையிடை நெடும்பொழு துறைதல்
இறப்பரும் இசும்பின் ஏறுதல் இழிதல்
இளவெயிற் காய்தல்நீ ராடாது
உறப்பெருஞ் சிவலிங் கார்ச்சனை புரியா
தூண்டலும் வழுவெனப் படுமே. 45

பூத்தவள் பதிதன் இழிஞனை அழுத்தைப்
புத்தரைத் திகிரிமேற் பொறித்த
மூர்த்தியைத் தீண்டல் காண்டலும் விலக்கே
இலங்கும்புண் டரம் இன்றி
மீத்திகழ் வடிவம் முதலிய பொறித்த
வேதியர் முகத்தினை மறந்தும்
பார்த்துளோர் கம்பத் தலைவனைப் படர்ந்து
கண்ணுறின் நண்ணுவர் தூய்மை, 46

வானவில்லைப் பிறர்க்குக் கண்டு காட்டல், பழித்தற்குரிய பெருஞ் சண்டைகளை வறிதே கொள்ளல், இரு கைகளால் முகந்து நீரைப் பருகல், வேள்வித் தீ, சிறந்த பசுக்கள், பார்ப்பனர், தேவர், சூரியன், ஆசிரியர், சந்திரன் இவர்முன் நல்லிருக்கை கொள்ளாமல் மனம்போனபடி இருத்தல் ஆக இவையும் குற்றம் எனப்படும் 43

பிறருடைய நகம் மயிர் இவற்றைக் களைதல், நகங்களாற் பற்களைக் கீறுதல், குடியில்லாத பாழ்மனையில் தனியே துயிலல் உறங்குவோரை எழுப்புதல், வடதிசையில் தலையை வைத்து உறங்கல், துரும்புகிள்ளல், பிறருடைய செருப்பு, உடை இவற்றை அணிதல் ஆகிய இவையும் வழுவெனப்படும். 44

பாவிகள், பெருநோயர், தாழ்குலத்தவர், சண்டாளர், கொடும் பாவச் செயலைப் புரிவோர் ஆகிய இவர்கள் மிக்கிருக்கும் ஊர்களில் தங்குதல், மலையில் நெடுங்காலம் இருத்தல், கடத்தற்கரிய நீரூறும் மலைச்சரிவில் ஏறுதல் இறங்கல், காலை வெய்யிலில் இருத்தல், நீராடல், சிவபூசனை இவை தவிர்ந் துண்ணல் ஆகிய இவையும் குற்றங்கள் எனப்படும். 45

பூப்பெய்தினவளையும், ஒழுக்கமிலாதவனையும், இழிசனனையும், பிணத்தையும், அருக்னையும் தீண்டுதலும், காணுதலும் குற்றங்களாம். விளங்குகின்ற திருநீற்றினை அணியாது ஊர்த்துவ புண்டரம் முதலிய அணிந்த வேதியர் முகங்களை மறந்தும் பார்த்தல் குற்றமாகும். காணலுறின் திருவேகம்புரைத் தரிசனம் செய்து தூய்மை அடைக.  46

மறையுடன் ஏனை நூல்களை எச்சந்
தன்னுடன் மற்றைநல் வினையைக்
கறையறும் பார்ப்பா ரோடுஞ்சூத் திரரைக்
காஞ்சியி னெடும்பிற நகரைப்
பிறைமுடிக் கடவு ளோடரி யயனை
ஒப்பெனப் பேசற்க பேசிற்
குறைவரு நிரயக் குழியில்நீ டூழி
குளிப்பதற் கையமொன் றிலையே. 47

இன்னன பிறவும் மறைமுதல் நூல்கள்
விலக்கிடும் இவற்றினை யொழிக,
பன்னரு மறையின் புறத்துநூ லனைத்துங்
கெடுதியே பயக்குமா தலினல்
அன்னவை விடுத்து மறைநெறி வழுவா
தொழுகிநீள் அலர்பொழிற் காஞ்சி
தன்னில்ஏ கம்ப நாயகன் அடியார்
தம்மொடுங் குலாவுதல் முறையே. 48

இருமுது குரவர் இறந்திடு மதிநாள்
ஆண்டுதோ றெய்துழி யுகாதி
வருமனு வாதி உவாமுதல் தினத்தின்
வயங்குதென் புலத்தவர்க் குறித்துத்
திருமறை யவர்க்கு முறையினூட் டிடுக
ஏனைமாத் தலங்களிற் செய்யும்
பெருநலம் அனைத்துங் காஞ்சியின் ஊட்டும்
பேற்றினைச் சிறிதும்ஒவ் வாவால். 49

தென்புலத் தவர்தாம் அயன்தரு மரீசி
முதலியோர் சிறுவர் அங்கவருள்,
இன்புறு மரீசி விராட்டுவை முதலோர்
ஈன்றவர் சுராசுரர் முதலோர்க்
கன்புடைப் பிதிர ராகுவர் கவியோ
டங்கிரா புலத்தியன் வசிட்டன்
என்பவர்க் குதித்தோர் மறையவர் அரசர்
வணிகர் வேளாளருக் கியைவர் 50

வேதத்தொடு பிற நூல்களையும், யாகத்தொடு பிற அறச் செயல்களையும், களங்கமற்ற பார்ப்பாருடன் சூத்திரரையும் காஞ்சி நகரொடு பிற நகர்களையும், சிவபிரானொடு திருமால் பிரமரையும் ஒப்பாக வைத்துப் பேசற்க. ஒப்பாகப் பேசில் பல்லூழிக் காலம் நிறைந்த நரகக் குழிகளில் மூழ்குவதற்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. 47

இவை போல்வன வாக வேதங்கள் விலக்கிய யாவும் விலக்குக. புறச் சமய நூல்கள் தீங்கையே விளைக்குமாகலின் அவற்றைக் கைவிட்டு வேதாகம விதிவழிப் பிறழாது ஒழுகித் திருவேகம்ப நாயகர் அடியவரொடும் கூடியிருத்தல் முறை யாகும். 48

தாய் தந்தையர் இறந்த நாளாகிய ஆண்டுதோறும் அம் மாதத்தில் வரும் அப் பச்சத்துத் திதியிலும், யுகாதி மனுவாதி அமாவாசை, பருவம் எனப்படும் நாட்களிலும் விளங் குகின்ற பிதிரரை நோக்கி அந்தணரை முறைப்படி உண்பிக்க. பிற பெருந்தலங்களிற் செய்யப்படும் தருப்பணாதிகளால் வரும் பெருநன்மைகள் யாவும் காஞ்சியில் உண்பிக்கும் பேற்றினுக்குச் சிறிதும் ஒவ்வாவாகும். 49

பிதிரர் என்போர் பிரமனுர் தம் மக்களாகும் மரீசி முதலா னோருடைய மக்கள் ஆவர். அவர் தம்முள் மரீசி விராட்டு முதலாமவர் மைந்தர்கள் தேவர் அசுரர் முதலோர்க்கும் கவி, அங்கிரா, புலத்தியன், வசிட்டன் எனப்பெறும் முனிவரர் தம் மக்கள் முறையே வேதியர்க்கும், அரசர்க்கும், வணிகர்க்கும் வேளாளர்க்கும் பிதிரராவர். 50

முனிவரிற் பிறந்தார் தென்புலத் தவரம்
முதல்வரிற் சுராசுரர் பிறந்தார்,
புனிதவிண் ணவரிற் சராசரம் அனைத்தும்
புகரறத்தோன்றின முறையால்
இலையசீர்ப் பிதிரர் தமைக்குறித் தீசன்
இணையடிக் கன்புடை மறையோர்
நனியுளங் களிப்ப உறுதியாற் காஞ்சி
நகர்வயின் ஊட்டுதல் கடனே. 51

இம்முறை இல்லின் வைகி இடைப்படுங் காற்கூ றுயுள்
செம்மையிற் கழிப்பிப் பின்னர்ச் செறிமயிர் நரைப்புக் காணும்
மம்மரின் அறிவு மிக்கார் மனைவியை மகன்பால் வைத்து
வம்மென உடன்கொண் டேனும் வனத்திடைச் சேறல்
வேண்டும் 52

விழைதரு காஞ்சி மூதூர்ப் புறனில வரைப்பின் மேவித்
தழைபொதி சாலை வைகி வேனில்ஐந் தழலின் நாப்பண்
மழையினிற் பனியில் நீருள் வதிந்துமா தவங்க ளாற்றிக்
குழைவுறு மனத்தான் உஞ்ச விருத்திகொண் டுறைக மாதோ. 53

கண்டிகை நீறு தாங்கிக் கம்பனைக் காம நோக்கின்
ஒண்டொடிப் பிராட்டிதன்னை உன்னிஅஞ் செழுத்தும் எண்ணி
அண்டர்கோன் பூசை யாற்றி அன்னணம் வதிந்த பின்னர்
மிண்டரும் வனத்தின் வாழ்க்கை மெய்த்தவ முதிர்ச்சி யாலே. 54

அற்றமில் அறிவில் தூய ராகிஇவ் வுலக வாழ்வும்
பொற்றபூங் கமல வாழ்க்கைப் புண்ணியன் முதலோர் வாழ்வும்
பற்றற வெறுத்து வீட்டின் அவாவுறும் பான்மை பெற்றுன்
முற்றுறத் துறவின் எய்தி மறைமுடி புணர்தல்வேண்டும். 55

ஐந்தவித் துயர்ந்த ஆசான் றன்புடை அருள்நூல் கேட்டுச்
சிந்தனை செய்து மாணத் தெளிந்துபின் நிட்டை மேவும்
இந்தவா றடைவின் எய்தும் இயல்பினைத் தலைநின் றோறார்
அந்தணன் இருதாள் என்றும் அகந்தழீஇ ஒழுகல் ஆறே. 56

முனிவரிடத்துப் பிதிரரும், அப்பிதிரரிடத்துச் சுராசுரரும் தேவரிடத்துச் சராசரங்களும்பிறந்தன ஆகலின் அப்பிதிரர்களை உளங்கொண்டு சிவ பெருமான் திருவடிக்கன்புடைய வேதியர் பெரிதும் உள்ளம் மகிழும்படி அவர் தம்மைக் காஞ்சியில் உண்பித்தல் இல்வாழ்வார்க்குக் கடப்பாடாம். 51

இவ்வாறு இல்லறத்தின் வழுவா தொழுகி ஆயுளின் நான்கிலொரு பங்த காலம் நன்முறையிற் கழித்த பின்பு மயிரில் நரைதோன்றி மயக்கு நிலையின் அறிவு மிக்கவர் மனைவியை மகனிடத்து வைத்தேனும் அன்றி உடன்கொண்டேனும் வனத்தினை அடைக. 52

விரும்பத்தகும் காஞ்சிக்கு அயலே சென்று பன்னசாலை அமைத்து வாழ்க்கையில் இளவேனில் முதுவேனிற் பருவ காலங்களில் பஞ்சாக்கினிநடுவிலும் பனிக்காலங்களில் நீருளும் நின்று தவம்செய்து நெகிழ்ந்த உள்ளத்தனாகி உஞ்சவிருத்தி பெற்றுண்டு தங்குக. 53

உருத்திராக்கம் விபூதி இவற்றைத் தரித்துத் திருவேகம் பரைப் பெருமாட்டியொடும் நினைந்து திருவைந்தெழுத்தைச் செபித்துத் தேவதேவன் பூசனையைப் புரிந்து அவ்வாறு வதிந்த காலை வானப்பிரத்த வொழுக்கையில் உண்டாகிய உண்மைத் தவத்தின் முற்றுப்பேற்றினாலே. 54

குற்றமற்ற அறிவுடைமையால் மனந்துயராகி இவ்வுலக வாழ்க்கையினும், பிரமபதம் முதலாம் பதங்களினும் உள்ள பற்றினை முற்றவும் வெறுத்தொழித்து வீடு பேற்றில் விருப்பு மிகும் இயல்பினைப் பெற்றவன் (சந்நியாசம்) முழுத் துறவினை எய்தி வேதாந்தப் பொருளை உணர்தல் அவசியம். 55

ஐம்புலன்களை வென்றமையால் உயர்ந்த ஆசாரியனிடத்து அருள்நூலைக் கேட்டுச் சிந்தித்து மிகத் தெளிந்து பின் நிட்டை கூடும் இவ்வியல்பினை ஒன்றன்பின்னொன்றாக அடையும் நிலையைத் தலைப்பட்டு விடையூரும் பெருமானார் தம் திருவடிகளை என்றும் உள்ளத்துள் தழுவி ஒழுகலே முறையாகும். 56

அடற்கொடும் பாசம் மாற்றிப் பசுக்களை அருள்விட் டுய்ப்பப்
படைத்தளித் தழித்து நோக்கும் பரம்பொருள் சிவனே என்றல்
உடற்றுநர்க் கரிய வேத உள்ளுறை யாவ தென்னத்
தொடக்கம்ஈ றெழுவா யான இலிங்கத்தால் துணிதல் கேள்வி 57

உவமையின் ஏதுத் தன்னுற் கேட்டதை உள்ளங் கொள்ள
அவமறச் சிந்தை செய்தல் சிந்தனை அதனைப் பல்காற்
சிவனுறப் பயிற்சி செய்கை தெளிதலாம் விளங்கக் காண்டல்
தவலறு நிட்டையென்று சாற்றுவர் புலமை சான்றோர். 58

இத்திறம் பயின்று வைகி இருவகைப் பற்றும் நீத்த
உத்தமத் துறவின் மேலோர் ஊர்வயின் பிச்சை யேற்றுச்
சுத்தநீர் அலம்பி முக்கட் சுடரினுக் கூட்டிப் பின்னர்
அத்தகு விதியின் ஓர்போ தெண்பிடி அருந்தல் வேண்டும். 59

அல்லவை முழுதும் நீக்கல் ஆன்றவர் கழித்த தூசுங்
கல்லசும் பெற்றிக் கோடல் காழ்மரத் தடியின் மேவல்
பல்லவும் ஒப்பக் காண்டல் தமியனாய்ப் படர்தல் வேற்றுப்
புல்லியர் இணக்கந் தீர்தல் பொறிவழி மனஞ்செல் லாமை 60

அடித்துணை நிலத்தில் நோக்கி மிதித்திடல் அறுவை தன்னில்
வடித்தநீர் பருகல் நெஞ்சில் தூயது மாணக் கோடல்
படிற்றுரை யின்றிக் கூறல் நன்மையே பயப்பப் பேசல்
எடுத்துரை பிறவும் முத்தன் இலக்கணம் என்ப மன்னோ. 61

உறையுளோ டங்கி பேணல் கல்வியின் உடலை ஓம்பல்
சிறையுடற் பொருட்டுச் சீற்றஞ் செய்திடல் சாலப் பேசல்
புறனுரை இகழ்ச்சி பிச்சைப் பொருட்டல தூர்க்குச் சேறல்
மிறையுறுத் திடும்பை செய்வோர் தம்மையும் வெகுள லாகா 62

வலியுடைய கொடிய மலங்களின் வலியைக் கெடுத்து ஆன்மாக்களை முத்தியிற் செலுத்தும் பொருட்டுப்படைத்துக் காத்து அழித்து இவற்றின் வரு போக உயிர்க்குப் பருவத்தை நோக்கும் எவற்றினையும் கடந்த பொருள் சிவபிரானுரே எனல் பிணக்கர்க்கு அரியலாகாத வேதத்தின் உட்கிடையாவது என்று உபக்கிரம உபசங்கார முதலாகிய இலிங்கத்தால் ஒருதலை துணிதல் கேள்வி ஆகும். 57

ஏதுக்கள், எடுத்துக் காட்டுக்களால் கேட்டவற்றை வீண்சிந்தனைகள் அகலச் சிந்தித்தல் சிந்தனை ஆகும். அதனைப் பன்முறை கலக்கு மாறு பயிற்சி செய்தல் தெளிதலாகும். அறிவில் வைத்துத் தெளியக்காணுதல் குற்றமற்ற நிட்டை என்று அறிவான் முதிர்ந்தோர் விரித்துரைப்பர். 58

இத்திறத்தினைப் பல்கால் பழகி யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் விட்ட துறவின் முதன்மை பெற்றோர் ஊராரிடும் பிச்சை உணவினை ஏற்றுச் சுத்த நீரால் அலம்பி முக்கண்ணுடைய முதல்வனுக்கு நிவேதித்துப் பின்பு எட்டுப் பிடி அளவுடைய உணவை ஒருபொழுதே உண்ணு தல் வேண்டும். 59

பாவச் செயல்களை முற்றவும்விடுத்தலும், பெரியோர் உடுத்துக் கழித்த உடையை நீரில் நனைத்துக் கல்லில் எறிந்து உலர்த்தி உடுத்தலும், வயிரமேறிய மரத்தடியில் தங்குதலும் பல்லுயிரையும் வெறுப்பு விருப்பின்றி ஒப்ப நோக்குதலும், தனியனாய் யாண்டுஞ் சேறலும், அறிவைத் திரிக்கும் கீழ் மக்க ளொடு கூடாமையும், ஐம்பொறிகளின் வழி மனத்தைப் புறப்பொருள்களிற் செல்ல விடாமையும். 60

ஓரறி வுயிர்க்கும் உறு துயரை மதித்து நிலத்தைப் பார்த்து நடத்தல் (தலைதாழ்த்தலுமாம்) ஆடையால் வடித்தெடுத்த நீரைப் பருகல், நன்னினைவை உறுதியாகக் கொள் ளுதல் மெய்பேசல், பிறர்க்கு நலம் பயப்ப வற்றையே பேசுதல், எனப்படும் இவையும் எஞ்சிய பிறவும் சீவன் முத்தன் இலக்கணம் என்று கூறுவர். 61

ஓரிடத்தில் நிலையாக இருத்தலும் எரியோம்பலும், கற்ற கல்வியை விற்று வயிற்றை வளர்த்தலும் உயிர்க்குச் சிறையாக அமைந்த இவ்வுடம்பை வளர்த்தற் பொருட்டு சினங் கொள்ளலும் மிகுதியாகப் பேசுதலும், புறங்கூறலும், பழித்துரையும் பிச்சைப் பொருட்டன்றியும் ஊர்க்குள் புகுதலும், துன்புறுத்துவோர் தம்மையும் வெகுளுதலும் ஆகாவாம். 62

சினவிடைக் கடவுள் பூசை கண்டிகை திருவெண் ணீறு
கனவினும் இகழா தோம்பல் கதிரொளி உலோகம் அல்லாப்
புனிதபா சனத்தின் நீரால் தூய்மைகள் பொருந்தக் கோடல்
வினைஇகந் தவர்க்காம் என்ப வேள்வியிற் சமசம் போலும். 63

என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோய் எவற்றி னுக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
புன்புலை உடம்பே ஆவி வருத்திடும் பிணிவே றில்லை. 64

பெரும்பிணி இதனைத் தீர்க்கும் மருத்துவன் பிறவி யில்லாப்
பரம்பொரு ளான முக்கட் பரமனே என்று தேறி
முரண்பயில் விடையோன் தென்பால் முகத்தினைச் சரணம் எய்தி
விரும்பிவீ டுறுதற் பாலார் பிறப்பினை வெருவப் பெற்றார். 65

மற்றைத் தெய்வங்கள் எவற்றையும் விடுத்துமா நீழற்
கற்றைச் செஞ்சடைப் பிரான்சரண் சரணெனுங் கருத்தே
பற்றிச் சாவினும் வாழ்வினுங் களிப்பிகல் படாமை
எற்றைப் போதும்ஒத் தொழுக்லே துறந்தவர்க் கியல்பாம். 66

பொறுமை கல்விமெய் தூய்மைஐம் பொறிதெறல் அடக்கம்
உறுதி நாண்வெகு ளாமைகள் ளாமைஒண் பூதி
மறுவில் சாதனஞ் சிவார்ச்சனை தியானம்வண் பதினான்கு
அறமும் நல்லறம் புரிபவர்க் கிலக்கண மாமால். 67

சொன்ன நால்வகை நிலைகளில் துரிசற ஒழுகிக்
கன்னி மாநிழற் கண்ணுதல் அகத்தொழும் பாற்றி
மன்னி நீடிய காஞ்சிமா நகர்வயின் வதிவோர்
துன்னு மும்மலத் துகள்அறுத் தின்பவீ டுறுவார் 68





சிவபூசனையையும், உருத்திராக்கத்தையும், திருவெண்ணீற்றையும் நனவினும், கனவினும் மிகுத்துப் போற்றுக. ஒளியுடைய உலோகங்கள் அல்லாத மரம். மண் இவற்றால் ஆய தூய பாத்திரத்தால் நீராடல் முதலியன வினைகளை ஒழித்த சீவன் முத்தர்க்கு ஆகும். வேள்வியிற் கொள்ளும் மரப் பாத்திரம் போலும் என்க. 63

என்பை நரம்பாற் கட்டிக் குடர் நிணம் ஊன் இவற்றை அப்பிப் புல்லிய புழுக்கள் பொதிந்து இரத்தத்தை கொண்ட புண்ணினின்றும் அறாது ஊறி ஒழுகி முடைநாற்றம் வீசித் துன்பத்தைத் தரும் நோய் அனைத்திற்கும் குடி புகும் இடமாய் புறந்தோலால் மறைக்கப்படும் மிக்கிழிந்த உடம்பே உயிரை வருத்தப் படுத்திடும். வேறோர் நோய்மிகை; இல்லையுமாம். 64

பிறப்பினை அஞ்சப்பெற்றவரே தீரா நோயாகிய இப்பிறவி நோயைத் தீர்க்கும் வயித்தியநாதன் தனக்குப் பிறப்பில்லாத முதற் பொருளான முக்கண்களையுடைய பரமனே என்று தெளிந்து வலிமை மிக்க விடையை உடைய பெருமான் அகோர முகத்தை அடைக்கலம் அடைந்து விரும்பி வீட்டினைப் பெறுதற்குப் பக்குவராவர். 65

பிற தெய்வங்களைத் தொழாது மாவடியில் வீற்றிருக்கும் தொகுதி கொண்ட சிவந்த சடைப்பெருமானுர் திருவடிகளே புகலிடம் எனத் துணிவு கொண்டு சாதல் வாழ்தல் இவற்றுள் ஒன்றை விரும்பியும் ஒன்றனை வெறுத்தும் திரிவுபடாது ஒரு தன்மையராய் எக்காலத்தும் சமநிலை பெற்றொழுகுதலே துறந்தவர்க்கு முறையாகும். 66

பொறுமை, கல்வி, தூய்மை, ஐம்பொறி, அடக்கல், அடக்கம், உறுதி, நாணம், சினமின்மை, கள்ளாமை, விபூதி, சிவசின்னம், சிவ பூசனை, தியானம் ஆகிய இப்பதினான்கும் நல்லற நெறி நிற்போர்க்குப் பொருந்திய இலக்கணங்களாகும். 67

மேற்கூறிய நால்வகை ஆசிரமங்களில் குற்றமற ஒழுகித் தெய்வ மாந்தருவின் நீழலில் அமர்ந்த திருவேகம்பர்க்கு அகத்தடிமை செய்து ஊழியினும் அழியாத காஞ்சியில் வாழும் இயல்பினர் செறியும் மும்மலக் குற்றம் நீங்கி இன்ப வீட்டினைத் தலைப்படுவார்.

ஒழுக்கப் படலம் முற்றிற்று.

